வரிசை எண் : 3135 சுவடி எண் : 1603-q

# நந்தீசர் திருமந்திரம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 21×3 செ.மீ
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : நந்தீசர் பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நந்தி உரைத்ததோர் ஞான உபதேசம்
அந்தித்த அக்கரம் ஐமூன்ற தாய்விடும்
பாதித்தச் சத்திகள் பத்தும் தரக்குளே
உத்தி யுலகத்தி லுரைத்திட வாகாதே! — 1

முடிவு :

யிணையடி யிரண்டு போற்றி பனி............
கதிரோன் போலும் பாவங்கள் நீங்கி நிற்கும்
முனிமொழி முப்பதுக்கு முனபதால் காப்பதாமே. — 14

நந்தீசர் திருமந்திரம் முற்றும்
திருச்சிற்றம்பலம்
சிவபஞ்சநதம். தர்மசம்வர்த்தினி
துணையாக வேண்டியது

காலம் :

இல்லை

குறிப்பு :

திருமூலர் திருமந்திரம்போல நந்தீசர் சொன்ன திருமந்திரம்-14, இது ஞானோ பதேசமாகும்.



வரிசை எண்: 3136 சுவடி எண்: 1604-a

# அகத்தியர் சூட்ச தெரிசனம்

ஏடுகள்: 4 கி. எண்ணிக்கை: 100 அளவு : 16× 3செ.மீ
பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : தத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம்.

சொல்லுகிறேன் சூட்சத்தின் மகிமை கேளு
சுருதிவெளிக் கெட்டாத சூட்ச மப்பா
வெல்லுவையோ சொல்லுதற்குப் பிள்ளாய் பிள்ளாய்
வேதாந்தம் பறையுமறைக் குள்ளே

முடிவு :

சூலைக்குளியால் நிலைக்குவந்து அமுர்த முண்டு
சோதியாம் பராபரத்தின் செயலென்
றலைத்துவிட்டு ஆதியந்த மில்லா திடத்தில்
அமந்து நிற்ப்பகட்டி நின்றயிடந்தான் காணே! — 6

சிவமயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, 6 செய்யுட்களில் தத்துவத்தைப் போதிக்கிறது



வரிசை எண் : 3137 சுவடி எண்: 1604-b

# மச்சமுனி ஞானத் தாழிசை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 16×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : மச்சமுனிவர் பொருள் : ஞானம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நெட்டுக் கொண்ட சடத்தக்குளா ரென்றர்ப்
நின்றவன்னி ரவிசோமன் ஒன்றல்லோ
கட்டுக் கொண்டிட வாயுவைப் பூரித்தக்
கலங்கிநின்று தவிப் பாருலகத்தோர்.

முடிவு :

பத்தரெனாது வேறிலை யுன்மனை பானத்தாலும்
பணிந்திட்ட பூசையால்

சுத்தரெண்டது வேறிலைச் சூதத்தால்
தொட்ட லோகம் பசும் பொன்னு மானதே. — 10.

சிவமயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, தந்துவமுரைக்கிறது.



வரிசை எண் : 3138 சுவடி எண்: 1604-c

## குருபாத தரிசனம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 16×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: தத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

குருபாதமே துணை

பாருநீ யிடைபிங்கலை சுழிமுனையின் மையம்
பதராமல் மனக்கண்ணை யதிலே வூணி
காருநீ குருபதத்தை யடுத்துக் காத்தால்
கருணையுட நிடமிவடமென்று சொல்வார்.

முடிவு :

ஊனான உடலேது பூதமேது
உண்மையாய் வாழ்ந்திருக்கும் தெய்வமேது
கோனான பிரம்மமென்றும் கூறலாகும்
கூரவென்னா வென்றாக்கால்க் கூறலேதோ. — 5

சிவமயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தலைப்பு இல்லை. செய்யுளமைதிகண்டு தலைப்பிடப்பட்டது.

★★★★

வரிசை எண்: 3139 சுவடி 1604-d

## யேகநாதர் பாடல் —16

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 16×3 செ. மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : யேகநாதர் பொருள் : தத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

அவ்வை படைத்த எழுத்தும்
அகார முதலெழுத்தும்
எவ்வா றான ஐந்துக்கும்
உயிரெழுத்தும்
செவ்வைபெற வானெழுத்தும்
பெண்ணெழுத்தும்
ஐந்துக்கு முயிரெழுத்துங்
காணுமோநற் தேசிகந்தான். —1

முடிவு :

கோத்திர மெல்லாம் வாழ்க
குருவினால் தெளிய வேணும்
முத்திரை யேகநாத அய்யரும்
அருளிச்செய்தார். —13

சிவமயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, தத்துவரீதியாக எழுத்துக்களின் வகைகளையும் தன்மையையும் கூறுகிறது



வரிசை எண்: 3140 சுவடி எண்: 1604-e

## சச்சிதானந்த மாலை

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 500 அளவு : 16×3 சென்டி மீட்டர்
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஞானம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்
முச்சுடராகி ஒன்றாய்
முடிந்ததோர் சோதி பாதம்
அச்சுதன் அயனுங் காணா
தகண்டமாய் அளவில்லாத
சச்சிதா னந்தஞான
சதாசிவ குருவைப்பாட
மெய்ச்சுட ருதைய மான
விளக்கொளி யுண்மை சேர்வாம் —1

முடிவு :

சச்சிதா னந்த மென்னும்
தன்மையை மகிழ்ந்து கேட்போர்
உச்சிமேற் பார்வை யாகி
உள்வளி திறந்து முப்பாள்
வச்சிர ஒளியுந் தாண்டி
மகிழ்ந்தொரு வாசல் கண்டு
நிக்ஷய நிஷ்களத்தே
நிராமயச் சோதி சேர்வாம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 466-h/D-1040 போன்றது. பாட வேறுபாடுகள் குதியும் காணப்படுகின்றன.



மின்சை எண் : 3141 சுவடி எண் : 160.-

# சங்கராச்சாரியார் ஞான உலா

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை 300 அளவு : 16×3 செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : சங்கராச்சாரியார் பொருள் : ஞானம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

சீரான காசி சிந்தம்பாலே இடியாயி
பேரான நெஞ்சகமே பேசக்கேள்—ஆராய்ந்து
உன்னை யுணர்ந்தபடி உலகத்தில் ஞானஉலா
தன்னை விரித்தறிவாய் தான்பாடு— பின்னை

முடிவு :

சங்கராச் சாரியார் தமிழா லுரைத்த உலா
யிங்காருங் கற்று யியம்பவே- கங்காளர்
வேதம் பெறுவார் மெஞ்ஞானம்—ஓதுங்
குருவா யனைவோ ரகத்தும் குணமுடையார்யந்
தருவா யிருப்பாரெனச் சாத்து.

பூரணி பாதமே கெதி.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 461-b/D-1022 போன்றது. இதில் முழுமையும் உளது

—★★—

வரிசை எண் : 3142 சுவடி எண் : 1604-g

# திருமூலர் நயன விதி—25

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 200 அளவு : 16×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நயன மிரண்டும் நாசி நுனி வைத்தங்
கயர்விலா வாயுள்ளே யடக்கி
தயநா நாட்டித் தாங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லை நாட்டே. —1

முடிவு :

ஆங்கார மாண்டுது யுத்தி மனமொன்றாய்
சாங்கால னாய்வீட்டில் சட்டையைத் தேரும்போல்

ஓங்காரம் மூலம் விட்டுக்கி யிடங் கொண்டு
நீங்காம லங்கொண்டி நிற்கும் நயனமே!

முற்றிற்று.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, கண் மருத்துவம் பற்றிக் கூறுகிறது.

இதன் பின்னர் அகத்தியர் — 16 ல் ஒரு ஏடும், பூசா விதியில் 3 ஏடுகளும், மருத்துவம் எழுதிய 2 ஏடுகளும் உதிரியாக உள்ளன.



வரிசை எண் : 3143 சுவடி எண் : 1605-a

## அகத்தியர் சூத்திரம் - 48

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 300 அளவு : 23½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 9-10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது, சுவடி எண் 385-b/D-785 அகத்தியர் பூரணசூத்திரம்-48 போன்றது, இதில் 4-வது ஏடு இல்லை



வரிசை எண் : 3144 சுவடி எண் : 1605-b

## கருவூரார் பலதிரட்டு

ஏடுகள் : 40 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 23½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

காலம் :

இல்லை:

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 507/D-1105 போன்றது முதல் ஏட்டை அடுத்து 16 ஏடுகள் இல்லை.



வரிசை எண் : 3145 சுவடி எண் : 1605-e

# அகத்தியர் பட்சணி

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 400 அளவு : 23½×4 செ.மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள்: மருத்துவம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

வேகமா நெறிசேரும்
விளைகளுந் ………… தாக
போகமும் விடாத தளர்ச்சியஞ்
சோக வாரியினால் வருதுன்பமும்
போகவானை முகத்தனைப் போற்றுவாம் — 1

முடிவு :

கற்றவ ரென்றால் தன்னைக்
கைவிடாக் குறுக காண்பார்
செற்றபே ரில்லை யின்னால்
சேர்ப்பது முத்தியாமே! — 131
குருபாதமே கெதி யென்று
சொல்லவும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 587/D-1205 போன்றது, ஆயினும் மற்ற சுவடிகளின் முதற்செய்யுள் 'திருமகள் சோதி' என்று முள்ளது. 2 காப்புச் செய்யுட்கள் இருக்கின்றன. இதில் இச்செய்யுள் 3-வதாகக் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 3146 சுவடி எண் : 1605 ஈ

## கருவூரார் திரட்டுச் சூத்திரம்

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 800 அளவு : 23½× 4 செ மீ.

பக்கத்திற்கு : 10-11 வரிகள் ஆசிரியர் : கருவூரார் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீர்பெருகு வேதாந்தச் சூத்தி த்ந்தை
தெட்சனா மூர்த்திபதந் தெளிந்து போற்றி
கார்பெருகுமா யுட பாதம் போற்றி
கயிலாசத் திருமூலர் பாதம் போற்றி

முடிவு :

கட்டியதோர் சிமிழுக்கு மூடி செற்று
கனகாசங் கழஞ்சொன்று மூன்றும்
.................. — 111

காலம் :

இல்லை

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 764-1/D 1537 போன்றது. அது 75 பாடல்களுடன் முடிவடைகிறது இதில் 111-ம் பாடல் முடிவடையாமல் தொடர்கிறது. பாடல்கள் இதில், ஒரே கருத்தினை வேறுவிதமாக் கூறுகின்றன.



வரிசை எண் : 3147 சுவடி எண் : 1605-e

## அகத்தியர்—12

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 23½×4 செ.மீ

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கடவுள் துணை
பூரணமாம் வாலைசர சோதி காப்பு
பொருந்திநின்ற பஞ்சக்ர ருள் பொருளே காப்பு

காரணமாய் நின்றதொரு கிணேசன் காப்பு
கருதிநின்ற வல்லவையுந் தேவர் காப்பு

முடிவு :

நாமடா சூதவித்தை வெளிவி டாதே
நாட்டினேன் சாலமென்று திரட்டுச் சூத்திரந்
தாமடா சூதவித்தை வெளிவி டாமல்
சத்தியமே பனிரெண்டு பாட்டு முற்றே! —12

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், 'அகத்தியர் நூற்றியிருபதுக்கு சுருக்கம்' என்ற தலைப்பும் உளது. 'பாஷாணங்கட்ட' என்ற ஒரே தலைப்பு 2-ம் ஏட்டின் பின்புறம் காணப்படுகிறது.

---

வரிசை எண் : 3148 சுவடி எண் : 1605-f

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 23½×4 செ.மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தேசீ நீர் சுத்தி
அறிந்திடவே யின்னமொரு செய்தி கேளு
அப்பனே ஆயியைத்தான் பூசை பண்ணு
அறிந்திடவே வடுகனுக்கும் பூசை பண்ணு
அப்பனே வடமாலை மிகவுஞ் சாத்தி.

முடிவு :

சேரடா திருகுக்கள்ளி சதுரக் கள்ளி
செயமான கொடுவேலி தேத்தாங் கொட்டை பூவரசம் வித்து
ஆரடா அமுக்கிரா யளிசம் வித்து
யப்பனே வகைக்கொரு பலமாய்க் கூட்டே. —28

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், வங்கத்தில் வேதை, கெந்தகக் குரு, பறாகிர ேவதை உப்புக் குரு, துருசுச் சுன்னம், குளித் தயிலம் ஆகியவை உள்ளன.

இது, ஏதோ ஒரு சுவடியின் பகுதியாகத் தெரிகிறது.



வரிசை எண் : 3149 சுவடி எண் : 1605-g

## இராமதேவர் பாடல் 500-லிருந்து 51-அட்சரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : $23\frac{1}{2} \times 4$ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : மாந்திரீகம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அன்பத்தொரு அட்சரம்

சூட்சமாய் மத்தமத்த சித்த ரெல்லாம்
சொன்னதுவும் பழுதென்று சொல்ல வேண்டாம்
சூட்சமாய் அகஸ்த்தியர் ஆயிரத்தில் சொன்னார்
சுழல்மேவும் கருவுதன்னைக் காண லாகும்

முடிவு :

நாமென்ற நகாரமது நெத்திமே
நலமாக கூவென்று உச்சியிலே போடு
ஆமென்ற அகாரமுதல் சகார மட்டும்
அன்பத்தொரு எழுத்திதுவே யறிந்து கொள்ளே! —267

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, ஐம்பத்தோ ரட்சரத்தின் தன்மையினைக் கூறுகிறது. இதன் பின் மருத்துவம் எழுதிய $4\frac{1}{2}$ ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 3150 சுவடி எண் : 1606-a

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 16 (2—17) கி. எண்ணிக்கை : 600 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

கோடா சூழி மாத்திரை பண்ணும் வகை

ரசம், கெந்தகம், நாவிபொ ............... இருவிதாம் பூர
பற்பம், சுக்குதிப்பிலி, மிளகு,
கடுக்காய் நெல்லிப்பருப்பு
தரணிக்காய், முத்தின வேப்ப மரத்து

முடிவு :

சோத்ததயும் வெண்ணெயும் ஒண்ணாகப்பிசைந்து
சோறு சுடச்சுடத் தின்னவும், லெத்தம் நிண்ணு
போகும் இது கை கண்ட மருந்து
நம்பிக்கையாகக் குடுக்கவும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், முதல் ஏடு இல்லாததால் நூற்பெயர் தெரியவில்லை. இதில், கஸ்தூரி ஏலாதி மாத்திரை, தலைமுழுக சந்தனாதித் தயிலம் முதலான பல மருந்துகள் கூறப் பட்டுள்ளன.

—★★—

வரிசை எண் : 3151 சுவடி எண் : 1606-b

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 500 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

அம்மான் பச்சரிசி, 30 ஒரு எலுமிச்சங் காயளவு
அந்தரத்துறசம சீரகம் ..............

முடிவு :

அகல் கொண்டு மூடிப் பத்து எரு
சட்டியில் புடமிடப் பற்பமாம்.
அந்த பற்பம் தேள்ல் ஒரு பணவிடை
கொள்ள வகுத்து கழிச்சல் கிராணி தீரும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதற்கு முத்தைய 4 ஏடுகள் இல்லாததால்
தலைப்பு அறியக்கூடவில்லை.
இதில், மார்வலிக்கு, விஷகாமாலை, பித்த பாண்டு,
பூனாகசஞ்சீவித்தயிலம் முதலியன உள்ளன.

★——★

வரிசை எண் : 3152 சுவடி எண் : 1606-ஶ

## அகத்தியர் வைத்தியத்தில், பொதிகை — 50

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 400 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அதிகாரத்துக்கான வயித்தியத்தில்
பொதிகை ... ... ... ... ... ...
பாத மறவாமல் லென்னாளுங்
காரணத்தா ... ... ... ... ... ... ...

முடிவு :

நாலான மணிபோற்றும் பிரமா சொன்னேன்
நலமுடைய முனிவன் மோமி நாம முத்தே. — 49
அகத்தியர் அன்பது முகிந்தது

முற்றும்.
குருவே துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

முதல் ஈடு பாதியாக உளது.
கடைசி ஏட்டின் பின்புறம் 'சூலைக்கு கெந்தகத்தயிலம்' எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 3153 சுவடி எண் : 1606-d

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை: 100 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அண்டவாதம்
ஆனந்த வாதம்
அந்திர வாயுவ
கல்வாதம் இந்த வகைக்கு மருந்து,
வச்சிர சிந்தாமணி உண்டை பண்ணும் வகை

முடிவு :

பேறான அகத்தியனார்
உளாத்தா ரிந்த
பெரியதொரு தயிலமென
வுகந்து செய்யே.
முன்மருந்து வகை யெல்லாமு செப்பக்கேளே

காலம் :

இல்லை

குறிப்பு :

ஏடுகள் முன்பின் தொடர்ச்சி இல்லை.



வரிசை எண் : 3154 சுவடி எண் : 1606-e

# அகத்தியர் வைத்திய சூத்திரம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 300 அளவு : 21×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

காலம் :

இல்லை

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 324-c/D-638 அகத்தியர் வைத்தியம் 36 ''போன்றது''

— ... — —

வரிசை எண் : 3155 சுவடி எண் : 1606-f

# வைத்திய நிகண்டு

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 300 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : அகராதி
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

மூலிகையின் பெயர்
மூலிகை வகை — புத்திக் காஞ்சொரியின் பெயர்
எழுத்தாணிப்பூடு, எழுந்ததிரு வழுத்தாத
பூமியில் வாசித்தப் பத்திரி அழுத்தாத காமி

முடிவு :

கோமேதகத்தின் பெயர்:
கோமிய வறளங் கோடிய நவாரகுவாந்
தாமிய மாற்சால தன்னுட நேத்திரம்
ஓமியப் பூலி கணவு நமத

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில் தலைப்பு இல்லை:
மூலிகைகளின் பெயர்கள் முதலியன உள்ளன,
இதன் பின்னர் மருத்துவம் எழுதிய 2 ஏடுகள் உள்ளன,



வரிசை எண் : 3156 சுவடி எண் : 1606-g

## யாகோபு சாத்திரம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : யாகோபு பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

யேகுவதனைத் தகடாக்கி
முஷ்ட்டிச் சாத்தில் யேழுதரந் தோய்ந்தரட்டி
யிடிக்கத் தானாகும்.

முடிவு:

சுருதி மேனிச்சாறு துத்தம் துத்தம்
வகைக்கோர் நாலு தரம் செய்து
தூள்சுடிப் பரந்த கடகராது மெருமாமே. — 3

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் பின்னர் வைத்தியம் எழுதிய ஏடு ஒன்றுளது.



வரிசை எண் : 3157 சுவடி எண் : 1606-h

## அகத்தியர்—300

ஏடுகள் : 80 கி. எண்ணிக்கை : 1600 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்.

காலம் :

இல்லை

குறிப்பு

இது, எமது சுவடி எண் 202-a/D-322 போன்றது.

★★★★

வரிசை எண் : 3158 சுவடி எண்: 1606-i

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 30 கி. எண்ணிக்கை : 500 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

மூலக்கிராணிக்கு மோரு சுடுகை

அவரை வேர் வரப்பூலா வேர்
கொணலை வேர் மருதை பட்டை
பொன்முசுட்டை வேர் முளகிலை
முக்காவேளை வேர் கருகப்பிலை
தூதுவளை வேர் அத்திப்பட்டை

முடிவு :

வெள்ளை விழுந்திடாது வெறிந்திடு மஸ்தாபோல
யெளப்புடன் ... ... ... துண்டாம மறைந்திடும்
புகைச்சல் காணும் மருளியேறு மேகமாமே.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், பலவிதமாக மருந்துகள் எழுதப்பட்டுள்ளன, ஏடுகள் ஒடிந்துள்ளன.



வரிசை எண் : 3159 சுவடி எண் : 1607

# அகத்தியர் 1200

ஏடுகள் : 140 கி. எண்ணிக்கை : 6000 அளவு : 32×3 செ. மீ.
பக்கத்திற்கு 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தொடக்கம் இல்லாததால், 2,3-வது ஏடுகளும் பாதியாக உள்ளதால் எழுத இயலவில்லை.

முடிவு :

ஆளுவாய் யிருநூத்தியிருபது
மீளுவாராணை விடாதே வெளிதனில்ச்
சூளவோர் சாபமது துடருமே உண்மை
கேளுநீ பிராணங்கேள்பது முற்றே. — 1199

திருச்சிற்றம் பலம் திருச்சிற்றம்பலம்
சிவமயம்

காலம் :

இல்லை :

குறிப்பு :

இதில், முதற்பகுதி மிகவும் சிதைந்துளது. இடையிடையேயும் ஏடுகள் சிதைந்துள்ளன. சில ஏடுகள் இல்லை.

★★★

வரிசை எண் : 3160 சுவடி எண் : 1608

# அகத்தியர் வைத்தியம் —150

ஏடுகள் : 17 கி எண்ணிக்கை : 700 அளவு : 26×4 செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்,

காலம் :

இல்லை :

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 324-b/D-637 போன்றது. சுவடியின் முன் பகுதிகள் ஒடிந்துள்ளன.



வரிசை எண் : 3161 சுவடி எண் : 1609

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 32 கி. எண்ணிக்கை : 600 அளவு : 33×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது. எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பரங்கிப்பட்டை எண்ணை

| | | |
|---|---|---|
| பரங்கிப்பட்டை | வராகள் | 20 |
| கடுகு ரோகிணி | ,, | 2½ |
| சிறுனாகப் பூ | ,, | 1½ |
| திப்பிலி | ,, | 1½ |
| கருஞ்சீரகம் | ,, | 1½ |

முடிவு :

அப்புறம் கெந்தி போட்டு கிண்ட நெருப்பு.........
கொட்டி முணிக்கி புளியம் பிராணி
தணலில் ........ யெந்தத்தினமும் ஆறும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், திறணியெண்ணை, வேப்பெண்ணை, தாழச்செந்தூரம், டி பஸ்பம், கெந்தக பற்பம், காடிக்காரம், போக வயித்தியம், சகலரோகங்களுக்கும் வல்லாதி லேகியம் முதலியன உள்ளன.



வரிசை எண் : 3162 சுவடி எண் : 1610-a

## ஆத்ம போதம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 22×4 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : ஸ்ரீசங்கராச்சாரியர் பொருள் : தத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஸ்ரீ பகவான் சங்கராச்சாரிய சுவாமியவர்கள்
உத்தமாதிகாரிகளுக்கு அனுக்கிரகாரம் சர்வ
வேதாந்த சார சங்கிரகமான ஆத்ம போதாந்தப்
பிரகரனம் உபதேசிக்கிர பிரகாரம்

முடிவு :

அக்கிஞான மலினத்துவ மாகுற, சீவ உபாதியை
போக்கடிச்சு சுயம்பிரகாச ஆற்ம சொரூபத்திலே
விவேக ஞான்மே லயமாகிறது. அதெப்படி.
தேத்தாங் கொட்டையினாலே செலஞ்தெளிஞ்சது போல — 5

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, ஆன்ம தத்துவத்தைக் கூறுவது.



வரிசை எண் : 3163 சுவடி எண் 1610-b

# ஆத்மபோதம் ?

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை 400 அளவு : 22×4 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : ஸ்ரீதத்தாத்ரேய சுவாமிகள் பொருள் தத்துவம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தெத்தாத் திறய தேசிகன் திருவடி வாழ்க.

கையிலாச சுத்த வேதாந்த குரு பரம்பரை
ஸ்ரீதெத்தாத் திரய சுவாமி உபதேசித்த பிரகாரம்.

பரிபூரணமாய் நிச்சலமாய்
அலையில்லாத சமுத்திரம் போலே
ஞான சொருபமாயிருக்கிற அறிவுதானே சிவன்.

முடிவு :

சிவாபவம், ஈசுரபாவம், கேவலானந்தம் —3
கேவலானந்தத்துக் கடிமை யீசுரபாவம்.
ஈசுரபாவத்துக்கு அடிமை சிவபாவம்
சீவபாவத்துக்கு ஆண்டவன் யீசுர பாவம்
யீசுரபாவத்துக்கு ஆண்டவன் கேவலானந்தம்
கேவ்லானந்தத்தில் ஆண்டவனுமில்லை
அடிமையு மில்லை

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, தத்துவப் பொருளை விரித்துரைக்கின்றது. உடலறிவிளக்கம்போல் காணப்படுகிறது. தலைப்பு இல்லை.



வரிசை எண் : 3164 சுவடி எண் : 1610-c

## பிரம்ம முனியார் பாடல் —360

ஏடுகள் : 70 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 22×4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : பிரம்ம முனியார் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீற்வளறான சோதி
சின்ம்மயங் கானம்ஞ் சோதி
ஆரனங் கொண்டை சூளி
அரானி திரான போக்கி

முடிவு :

அரைத்து முன்போல தங்கம் சேர்ந்து
அஞ்சுதிரம் வைத்தெடுக்க அருன மாமே! — 305

அருணமாம் செந்தூரம் வேதையிட்டால்
அழகான நவலோகம் பத்து மாத்தாம்
அருனமாம் சித்தரெல் ............

காலம் :

இல்லை

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 36-AD-61 போன்றது. பிழைகள் அதிகம். இதன் பின்னர் மருத்துவம் எழுதிய ஏடு ஒன்றுளது.



வரிசை எண் : 3165 சுவடி எண் : 1611-a

## இராமதேவர் — 80

ஏடுகள் : 27 கி. எண்ணிக்கை : 500 அளவு : 22×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : இராமதேவர்சுவாமி பொருள் : மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியிலே அமைந்த விதி எழுத்தைக் காண
அருளானநந்திபதம் அன்பாய்க் கொண்டு
சோதியென நின்றிலங்கும் னாத ரூபி
சுருதியுள்ள வாலைமனோன் மணியைப் போற்றி

முடிவு :

மணக்குமலர் மதிதனிலே மனத்தை வைத்து
வயித்தியனூ லெண்பதுவும் வகையாய்ப் பார்த்து
தனக்குமிது பொருளெனவே வணங்கிப் போற்றி
சதாகாலம் பூரணத்தின் சார்வாய் முற்றே ! — 82

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 125-b/D.207 போன்றது



வரிசை எண் : 3166 சுவடிஎண் : 1611-b

## இராமதேவர் அட்டாங்க யோக பட்சணி — 50

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 400 அளவு : 22×1½ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள்: மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது , எமது சுவடி எண் 125-c/D-208 போன்றது.



வரிசை எண் : 3167 சுவடி எண் : 1611-c

## அகத்தியர் கருக்கிடை சூத்திரம் — 48

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை : 500 அளவு ; 22×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாதமென்ற நூல்களெல்லாம் ஒடுக்கி ஒன்றில்
மாட்டவே சிவன் மைந்தன் கணபதியுங் காப்பு
நாதமென்ற உமையவளுஞ் சிவனுங் காப்பு
நாதாந்த மனோன்மணித்தாய் பாதங் காப்பு.

முடிவு :

நாட்டுகிற சித்தையெல்லாம் பாம்பு நஞ்சு
நலமான கருவிதுதான் நன்றா யப்பா
பூட்டுகிற பூட்டெல்லா மிதுதா னென்று
புகழ்ந்திட்ட உட்கருச் சூத்திரத்தாள் முற்றே! —48
அகத்தியர் கருக்கிடைச் சூத்திரம் முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், உட் தலைப்புகள் இல்லை.

இதன் பின்னர், உதிரி ஏடுகளாக 'திருமூலர் திரட்டு' அகத்தியர் நாற்பத்தெட்டு, முதலரன 9 ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 3168 சுவடி எண் : 1612

## வைத்தியத் திரட்டு

ஏடுகள் . 55 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 23×3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் . ஆசிரியர் : பலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக
பயித்திய சுரத்தின் குணம்
மூச்சுடன் போந்த மூக்கில் நீர் உண்டாங் கிருக்கவும்
யாகாயம் உழைப்பொடு உழைப்பு வெதுப்பு
விட்டுவிண்டது

முடிவு:

நிழலுலத்தி வைத்துக் கொண்டு
இஞ்சிச் சாத்திலிடச் சுரம்
சன்னி தோஷம் இதுவெல்லாந் தீரும்
இப்படிச் செய்யவும் குருமுன்னிற்கவும்

ஒழகநாதன் துணையாக வேணும்
வழம்பிகை துணையாக வேணும்

காலம் :

இல்லை

குறிப்பு.

இது, சுரம் தீர்க்கும் நூல். ஏடுகள், தலை தடுமாறியும் பிறழ்ந்தும், ஒடிந்தும் உள்ளன. பலவிதமான சுரத்துக்கும் மருந்துகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 3169 சுவடி எண் : 1613

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 400 அளவு : 24×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8—9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கிராவணமுஞ் செந்தூரங் கோடா கோடி
கெடியான யோகசித்தி காயசித்தி கோடி
கிராவணமு மதிசெயமுங் கோடி
கெட்டியதோர் குளிகையட்ட கற்பங் கோடி
கிராவணமும் புழுகிட்டால் சுண்ணை நிரும்
கேள்மகனே உருக்கினஞ் சவ்வாது கட்டே — 5

முடிவு :

யாசியே தங்கத்தை செம்பே யாக்க
யறையிரேன் சூதமொன்று கெந்தி யொன்று
வாசியே தாரமொன்று கூடக் கூட்டி
மகத்தான தாரமொன்று துருசுக் கேளே ! — 72

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் முதல் ஏடு இல்லாததால் இன்னநூல் என்று அறிவதற்கில்லை. இதில் செம்பு வேதை, தீமுறுகல் பாஷாணம் வெள்ளி, சூதவித்தை. பாஷாண வேதை, தங்க செம்பு முதலான பல தலைப்புகள் உள்ளன.

—+ + +—

வரிசை எண் : 3170 சுவடி எண் : 1614

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 30 கி. எண்ணிக்கை : 600 அளவு: 24 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4—6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பரங்கிப் பாஷாணம்
வெள்ளைப் பாஷாணம் கொண்டுவந்து
எருமை மாட்டுக் கொம்புக்குள் ............
கல்லு சுண்ணாம்பு வைத்து நடுக்கொண்டு
சரக்கை வைத்து மேலேயும் .. ... . ...

முடிவு :

பூனீர் சுத்தி
ஆத்தில் ஊத்து தோண்டி
இரைத்து, மறுபடியும் இரைத்து
மூன்றாமதாம் வருகிற சலத்தில் பூனீர்
கரை......தேய வைத்து காயவைத்து எடுக்க
சோதி .......

காலம் :

இல்லை

குறிப்பு:

இதில், கரும்பூனை அஞ்சனம், வெட்டைபதம், தம்பனம் கட்டின உப்புச் சுண்ணம், நாக செந்தூரம், கெந்தகக்கட்டு முதலான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 3171 சுவடி எண் : 1615

# தெட்சிணாமூர்த்தி சௌமிய சாகரம் —1200

ஏடுகள் : 185 கி. எண்ணிக்கை : 8000 அளவு : 36 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7—9 வரிகள் ஆசிரியர் தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

காலம :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 746-a/D-1485 போன்றது. இதில் 2 முதல் 30 ஏடுகள், 50-வது ஏடு ஆகியவை இல்லை. சில ஏடுகள் இடம் மாறியுள்ளன.



வரிசை எண் : 3172 சுவடி எண் ; 1616-a

# உத்திரபோதம் எனும் உத்திரஞானம் எனும் உத்திரப்பிதியுரத்திரம்

ஏடுகள் : 10 கி.எண்ணிக்கை : 250 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : பொன்மலை வில்லிமைந்தன் பொருள் : மதத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

பொன்மலை வில்லிமைந்தன் போதக மனாதிநாதன்
நன்மலை யரசாந் தந்த நாரணி யின்ற மானை
நின்மல வடிவே யெந்தன் நெஞ்சகத் தமர்ந்து வாழும்
மென்மலர்ப் பாதந் தன்னை மேவியான் போற்று வேனே! — 1

முடிவு :

உத்திரபோதந் தன்னை யுலகிலே யாவ ரெல்லாம்
பத்தியா லுகந்து கேட்ப பலவினை யகன்று போகும்
முத்தியுண்டாகும் வேத மொழியினுங் கானொணாத
சித்தியுண் டாகு மேனி தேசிகன் னூலி னாரா! — 51

திருச்சிற்றம்பலம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, தத்துவப் பொருளைக் கேள்வி பதிலாகக் கூறுவது. தெளிவான தலைப்பு காணப்படவில்லை.

★★★★

வரிசை எண்: 3173 சுவடி எண்: 1616-b

# கொங்கண சுவாமிகள் மூவாயிரத்தில் சிகார முதல் காண்டம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை: 150 அளவு: 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர்: கொங்கணர் பொருள் : தத்துவம்

நிலைமை: மிக மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

வாதமாங் குணங்கள் மூன்றும்
(வரிசை) யாய்ப் பார்க்க வேண்டில்
கோதறு குழல்லாள் சொன்ன
குருவருள் கிணேசன் கந்தன்
தீதறு பூசை பண்ணிச்
சிந்தையில் சிவங்கள் செய்ய
மாத்கி லாதே நிற்பாள்
வளர்ந்திடு ஞான மென்னே! — 1

முடிவு :

போதமென்று மனமென்று மதற்கே பேரு
பூமியென்றும் வானமென்று மதுக்கே பேரு
வேத மென்று மந்த மென்று மதுக்கே பேரு
வெளியொளியாய் நின்றதிது ரெண்டுந் தானே! — 16

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, தத்துவத்தின் குண முரைப்பது.



வரிசை எண் : 3174 சுவடி எண் : 1616-c

# சதுர்க்கோணமாலை

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 75 அளவு : 19×3½ செ. மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

காலம் :

இல்லை

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 759-e/D. 1324 போன்றது சிலபேறு பெற்றவர்கட்குப் பிறவியுன்டென்று கூறுகிறது.



வரிசை எண் : 3175 சுவடி எண் ; 1616-d

# அகத்தியர் அகவல்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : 19×3½ செ. மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி; ஓம்

சீரார் கமலஞ் சிறந்திருக்கும் .........யாய்சைதனில்
நீ ...... மண்டுக நெஞ்சே கேள் ...............

முடிவு :

வீத்திருப்பும் விமலன் பாதஞ் சிவந்ததுவும்
பங்கயம்போ லானதுவுங் கீதஞ் சிலம் பொலியுங்
கெம்பீரம் நாதம் பிறந்திடமே நன்மை
பேசாதிரு மனமே யிருந்த திடமே!

யெல்லயிருப்பூர் குருபாதம் கெதி

சிவமயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதுவும் தத்துவப் பொருளை உணர்த்துவது, மௌனம், மந்திரம் முதலானவை பேசப்படுகிறது.



வரிசை எண் : 3176 சுவடி எண் : 1616-உ

## வாசியோகம்

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 300 அளவு : 19×3½ செ. மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியகூடவில்லை பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாசியோக மிருபாதந் துணை

போச்சடா குறிகாட்ட வாசி யோகம்
பூட்டுவதார் சிவயோகம் சித்தர் சொல்வா
ராச்சடா யென்னூலே சொல்ல வேணும்
ஆர்பாட யிப்பிடித் தானக் காணேன்.

முடிவு :

போத்தி யவன்மனமும் உன்மனமும் நேராம்
பூரணமாங் கேதுவென்றும் ராகு வென்றும்
போத்தியவள் கண்டத்தில் பானம் பூண்டாள்
புருவமய்யத் தாயாரைப் பூசிப் பாயே ! —17

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, மூச்சுக் காற்றுச் சாதனைச் செயலைக் கூறுவது.



வரிசை எண் : 3177 சுவடி எண் : 1616-ரு

## மகாவாக்கியம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 150 அளவு : 19×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : சிவபெருமான் பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்.

சீருடைய செகசால வித்தை யெல்லாம்
செனகாதி ரிஷியெல்லார்க்கும்

மாரனத்தின் முடிவான மாகவாக் கியம்தான்
அரனருள் வடமொழியை அறிய வேதான்
பார்புகழுந் தமிழாலே விரித்துச் சொல்ல
பரமனருள் செல்வனெனு மொத்தைக் கொம்பன்
காருரைத்த விருசெலியன் மும்மத நால்வாய்
கரிமுகத்தா னைங்கரத்தான் காப்பு — 1

முடிவு :

ஆக்கியே கொல்லும்வகை யறியத் தானே
அசிபத லெட்சயமான சருவ சாட்சி
நீக்கமத்துத் தானாக யிருக்கின்ற நேர்மை
நிர்மலமா ஞானமுமத் திருக்கின்ற நெறியே ! — 17

ஓம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, 'தத்துவமசி' என்ற மகாவாக்கியத்தின் பொருளுரைப்பது.



வரிசை எண் : 3178 சுவடி எண் : 1616-ஓ

# சுப்பிரமணியர் ஞானம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 150 அளவு : 19×3½ செ. மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : சுப்பிரமணியர் பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ; ஓம்

நினைவிலே வைப்பதென்னா குருவின் பாதம்
நிச்சயமாய் சிவன்பாதம் தேவி பாதம்
கனவிலே மறவாதே ஒருநா ளுந்தான்
கர்மாந்திற மில்லையடா நோயு மில்லை
சினமான தாகாது புத்தி சொன்னேன்
சேதிமா னாக்கா ளறிந்து கொள்வான்
மனதிலே தெளிவானால் முத்தி யுண்டம்
வஞ்சினையொன் டாகாது வாசி பாரே ! — 1

முடிவு :

காட்டில்நீ யாலையாதே வெளியைப் பற்றி
கண்டாலோ பரைவாசல் துறக்கு மப்பா
தேடுநீ ஓங்காரத் தட்சரமே யப்பா
சிவாயநம அட்சரத்தைக் கூடக் கூட்டே. —12

சுப்பிரமணியர் ஞானம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தலைப்பு கடைசியில் உள்ளது, முதலில் இல்லை. தத்துவத்தைக் கூறி சிவத்தை யறிய உரைக்கிறது.



வரிசை எண் : 3179 சுவடி எண் : 1616-

## அகத்தியர் _ 50

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 250 அளவு : 19×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 591-1, D-1362 போன்றது.



வரிசை எண் : 3180 சுவடி எண் : 1616-ர

## அகத்தியர் வாசி சூத்திரம்

ஏடுகள் : 4 கி.எண்ணிக்கை : 100 அளவு : 19×3½ செ. மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்

ஹரி : ஓம்

மோட்சத்துக் கேயதும் வளி யினத்தைக் கண்டால்
மு...........ம் நூகனிகளிலே வாசி பார்க்க
பாச்சொத்தம ... ... ... ... ... ...

முடிவு :

குடிகெடுத்த வியாதியினால்
கிடந்திடாமல்
பானென்ற சந்திரன்போல் தேக
முண்டாலய்யா
மோட்ச பூரணத்தைப் பாரு. — 1

காலம் :

இல்லை

குறிப்பு :

இது மூச்சுக்காற்று நடக்கும் வாசியைப் பற்றிக் கூறுகிறது.



வரிசை எண் : 3181 சுவடி எண் : 1616-j

## திருமூலர் திருமந்திர ஆறாதாரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 19×3½ செ. மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆறா தாரம் வீவ ரைகளுஞ்
சீரா ........................
பாரோர் பரவ கமலப்பணி செய்யுங்
காரானை மூலக் கணபதி காப்பாயே —1

முடிவு :

அரியோ மென்னும்... பே நீதயஞ்சனம்
புரைபோரங்.....................
கரிமேகவரன்ன காட்டு மித்தில்
தர்யாமல் நெஞ்சு தயங்குதே
பராத்தி........பாதமே.

காலம் ;

இல்லை

குறிப்பு:

இதில், மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞா என்ற ஆறு ஆதாரங்களையும் பற்றிக் கூறுகிறது.



வரிசை எண் : 3182 சுவடி எண் : 1616-k

## சுத்த வேதாந்த சூத்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 19×3½ செ. மீ. பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம்
சுத்தவே தாந்தமாகிச்..........
..............தானாய்ப்
பகிலிரவு ரெண்டுமற்ற வித்ததுவானேயாகி
........... வாயுவுமாகி
சித்திது தேய்வுவித்தை சின்மயங்காப்புத் தானே'

முடிவு :

மாலயனாஞுங் கூடி
மவுனத்திலடங்கி நின்றார்

பாலமது வினை வழலையுண்டு
பண்பாய்ப் பறிந்து பாரே! —11

பாசத்தி துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

இது. வேதாந்தத்தினைச் சுருக்கிக் கூறுகிறது.



வரிசை எண் : 3183 சுவடி எண் : 1616-I

## தத்துவ நூல்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை: 100 அளவு : 19×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் குருபாத
பூசிக்க ஒட்டாது மனந்தா னப்பா
பெந்தவர்கள் மீதேரிப் பார்கொட் டாது
காசிக்கிப் போனாலுந் தீரொட்டாது
கர்மவினை தன்னைவிட்டு போம்மைந்தா.

முடிவு :

தாக்கடா அங்...............தேய்வும்
சரணமென்று ரெண்டையுமே பூசை பண்ணு
வாக்கடா வளிசொல்லி வந்து பேசும்
அக்கடா வாமுதற்கு மூலவீட்டில்
அடுப்புவைத்து சோறு கரியுண்ணே! —10

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், தலைப்பு காணைப்படவில்லை,
தத்துவநூல் என்று தலைப்பு தரப்பட்டது.



வரிசை எண் : 3184 சுவடி எண் : 1616-m

## நால்சாமம் பாரி

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 20 அளவு : 19 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆசையெனும் பாரத்தால் அளவிறந்த கர்மத்தால்
ஆசைநான் பரிபாகம் அறிகிலேன்—ஆசை
அறன்காவல் வைத்து அரனருளைப் பார்த்து
உறங்கா துறங்கா திரு. —1

தந்தையாய் மக்கள் தாரஞ்சகோதரம் சிறந்த
விந்துவையும் பொய்யென் றறியாத வீணரே—விந்தை
வெறும்பாழதாக்கி மெய்யருளைப் பார்த்து
உறங்கா துறங்கா திரு. —2

முடிவு :

ஆவின் சரீர மனித்திய மென்றே யிருந்து
காலன் தினந்திரிவான்.................ாலம்
கல்ங்காம லீசன் கருணை நேர்பார்த்து
உறங்கா துறங்கா திரு. —3

வானமணிதிரேக மனத்தறு காரம்வேடர்
ஞான மணியைத் திருடார் நன்னினார்—ஞானம்
நறுங்காம லீசன் நல்லணியை நீ பார்த்து
உறங்கா துறங்கா திரு. —4

காலம் :

இல்லை

குறிப்பு :

ஒரே பக்கத்தில் 4 வெண்பாக்களும் உள்ளன. நான்கு சாமத்திலும் இறைவன் திருவருளையுன்னி உறங்காதிருக்க அறிவுறுத்துகின்றது.

—★★—

வரிசை எண் : 3185 சுவடி எண் : 1616-n

# சுப்பிரமணியர் ஞானம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 200 அளவு : 19 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : சுப்பிரமணியர் ? பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நினவிலே வைப்பதென்னா..............வாசிபாரே! —1
பார்ப்பதற்கு இன்னமொன்று பகரக் கேளு
பழிபாவம் ஒருக்காலும் நினையாதே
கேள்ப்பதற்கு கெட்டித்த எட்டி வேரை
பகலவனாள் பகலகஷ்கி சாமந் தள்ளி

முடிவு :

காரான பெரியோர்கள் பாதம் போற்றி
கருதானே அஞ்செழுத்தின் பொருளைக் காணான்
சீரான சீரறிந்து நிலையில் நின்றால்
செத்தவர்க ளில்லையடா யில்லைத் தானே ! —20

குருபாதந் துணை.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் முதற்பாடல், இந்நூலின் 1616-ஒ-ன் முதற் பாடலாக உளது. தலைப்பு காணப்படவில்லை. அதில் 12 பாடல்கள் உள்ளள. இதில் 20 பாடல்கள்உள்ளன.



வரிசை எண் : 3186 சுவடி எண் : 1616-o

## அகத்தியர் சூத்திர ஞானம் 9

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 120 அளவு : 19×3½ செமீ.

பக்கத்திற்கு : 9—10 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சத்தியமே ப.........ரமே ஒன்றே தெய்வஞ்
சலருக்கு ............... ............... தானாச்சு
புத்தியினா லறிந்தோர்கள் புண்ணி யோர்கள்
பூதலத்தில் கோடியிலே ஒருவ னென்று

முடிவு :

கூட்டினால் மனம்வேறே பிரியொட் டாது
போய் அப்புறத்தில்க் கூர்ந்து நிற்கும்
முட்டினால் மவுனமென தீட்சை யாச்சு
உத்தமனே பதினொன்றும் முடிந்த வாறே

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, உலகியல் தருும நெறிகளைக் கூறுகின்றது

—★★—

வரிசை எண் : 3187 சுவடி எண் : 1616-p

# திருமூலர் எண்ணாயிரத்திலிருநூறு - மந்திரம்

ஏடுகள் : 24 கி. எண்ணிக்கை : 600 அளவு : 19×31½ செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : திருமூலநாயனார் பொருள்: தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

எண்ணாயிரத்தி லிருநூறு மந்திரம்
அண்ணாவிச் சொல்ல அடியேன் அறிந்தேன்
சொன்னான் சிவப்புசேர் பச்சை நீலம்
வண்ணா னறிவான் வகாரத்தின் ......யே — 1

முடிவு :

குருவான தந்தையென் நந்தியப்பா
திருமூலன் தானே செய்தொழில் சொன்னேன்
கருமூரான் கொங்கணன் நன்போக னிவர்கள்
தருபோ கன்னென செந்தமிழட்டி யென்னே ! — 201

ஓம் நன்றாக

காலம் :

றத்திராஷா வருஷம் கார்த்திகை மாதம் 16-ஆம் தேதி திருமூலர் திருமந்திரம் எழுதிய நன்மை சிதம்பரம்

குறிப்பு :

10-வது ஏட்டில் கோசபீசம் என்ற தலைப்பு உளது மற்றும், அறுநீர் ......... கற்பம் அகிய தலைப்புகள் உள்ளன.

இது, எமது சுவடி எண் 342-a/D-688 போன்றது.



வரிசை எண் : 3188 சுவடி எண் : 1616-ч

## பாலவாகடம்

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 300 அளவு : 19×3½ செமீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

அத்தி யுரித்தோ னிடத்தி லமந்த உமையா ளீன்ற
சத்தி கணபதியின் தாள்பேரற்றி - எத்திசையும்
கெற்ப மின்னார்க்குங் கிளைத்தபிணி தான்
தீர்க்கப் படாதாங் கிருகைக் கட்டுரைப்பேன்

முடிவு

சன்னி சுரத்துக்கு கையாந்தகரை மிளகில்
பேதிக்கிக் கருப்புக் கட்டியில் எலிகடிக்கு
குளம்பாலை வேர் களஞ்சி பாலிலிடவும்
தாமரை யிலை விரை கழநீரி லரைத்துக்
குடுக்கவும்

காலம்

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 44,227 ஆகியவற்றின் வேறாயது. இதில், கடைசி ஏட்டில் கருத்தக்குளம்பு என்ற ஒரு தலைப்பு மட்டும் காணப்படுகிறது.



வரிசை எண் : 3189 சுவடி எண் 1616-

## ஞானநூல்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 200 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : குருநமச்சிவாயர் பொருள்: தத்துவம்

நிலைமை : மிகமிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஹரி ஓம்

முச்சுடருக்கப்பால் முடிந்து நிற்கும் பேரொளியை
பச்சு ....... ... .... ... ... வாழ்த்துவாம்,
நச்சரவம் பூண்டானுமக் கன்று புகட்டுஞ்சிலை
...... ...... கான்றாங் கிணேசன் றாள் காப்பு — 1.

முடிவு :

............... வாயா கேளு பாத்திரமறிந்து பிச்சை பாஷை
முனிவர்க்கீ சாத்திரந் தழைத்து ஓங்கும்
சங்கமம் பொருளா மென்று
நேத்திரத் தூடே பார்க்க நிர்மலனாரருளே
முத்தும் — 23

குருனாதன் துணை
தேவிசகாயம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், ஞானத்தின் விளக்கம் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 3190 சுவடி எண் : 1616

## கோரக்கர் சூத்திரம்

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 350 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : கோரக்கர் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்: தேவிசகாயம்

அருள்பெற்ற நந்தி ஆசா னெனக்கு
பொருள் பெற்ற மூலர் போக ரெனக்குத்
தருவதத் தோழர் சட்டை முனியும்
பரமுள் கொங்கணர் பட்ச மிகுதியே ! — 1.

முடிவு :

குருவண்டு கோச பீசங்
குறித்ததோர் வீரம் பூரம்
குருவடி நிலஉப் போடு
கொள்கையாங் கல்லூப் போடு
குருநின்ற வெடியுப் போடு
கொண்டிட குருவாஞ் சீஷர்
குருபாதந் தொழுது வாதங்
கூறினேன் ......... வருளே முத்தே! — 99

காலம் :

இல்லை.

குறிப்பு :

மருத்துவ விளக்கம் இதில் கூறப்பட்டுளது.



வரிசை எண் : 3191 சுவடி எண் : 1616-ி

# சொருபானந்தர் ஆனந்தக் களிப்பு

ஏடுகள் : 11 கி எண்ணிக்கை : 300 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : சொருபானந்தர் பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 675-c/D-1321 போன்றது.



வரிசை எண் : 3192 சுவடி எண்: 1616-ங

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 19×3½ செ.மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: மருத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றிற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கிளிஞ்சிச் சுண்ணம்

ஆமப்பா ஊமையென்ற கிளிஞ்சி பத்து
அப்பனே எடுத்து நன்றாய்க் கழுவிப் போட்டு
வேமப்பா உழமண்ணில் கொதிக்க வைத்து
உத்தமனே யதிற்பூச மருந்து கேளு

முடிவு :

செய்திட்ட கட்டிக்கு கெந்த கத்தின்
செயநீரில் ரேசபறித் தகடு பத்தி
லொன்றுகை திட்டமாகவே சுத்தி வாட்டிச்
சென் ..........

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மருந்து வகைகள் கூறப்பட்டுள்ளன,



வரிசை எண்: 3193 சுவடி எண்: 1616-v

# திருமூலர் சுருக்கம்

ஏடுகள்: 1 கி. எண்ணிக்கை: 30 அளவு : 19×3½ செ.மீ
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம்

ஏண்ணா யிரத்திலு மேத்த மிதுவென்று
கண்ணா யிரத்தார் கடுக்காயின் தூளிலே
தண்ணா ரந்த சாமந்தாக்கியே மத்திக்க
அண்ணார்ந்த மூணுநாள்து மூன்று சாமமே! —1

முடிவு :

விந்தென்றால்ச் சுக்கிலம் மேவியோன் றானால்
பந்தென்ற செப்படி வித்தையும் பார்க்கலாம்
அந்தென்ற யிந்திர சாலமு மாடலரம்
செந்தென்ற போதையில் ஆனந்தஞ் சேர்க்குமே ! —7

திருமூலர் சுருக்கம் முற்றும்

காலம் :

இல்லை

குறிப்பு ;

இதில், தத்துவமும் பேசப்படுகிறது.



வரிசை எண் : 3194 சுவடி எண் : 1616-w

## திருமூலர் தீட்சை—10

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 19×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

காலம் :

இல்லை

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 843-d/D-1752 போன்றது. முன் சுவடியினைத் தொடர்ந்து நடுவில் தொடங்குகிறது.



வரிசை எண் : 3195 சுவடி எண் : 1616-x

## திருமூலர் சூத்திரம்—3

ஏடுகள் : 1/2 கி. எண்ணிக்கை : 20 அளவு : 19×3½ செ. மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆவென ஊவு மமந்தோர் பத்தாம்
ஈயென வென்று இசைந்தோர் நாலும்
பூவெனக் கொண்டு பொருளறி வார்க்குச்
சீயென வீசன் தெளிந்துரைத் தானே ! —1

முடிவு :

ஒக்குமே தேகம் பன்னிரு கொடியாம்
சிக்குமே வாசி தெளிந்துரைத் தானே ! —3

( 2 வரிகளே உள்ளன )
சூத்திரம் முற்றும்
குருரேமல் (என்றுளது)

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, தனித் தலைப்பின்றி முன் சுவடியைத் தொடர்ந்து எழுதப்பட்டுளது.



வரிசை எண்: 3196 சுவடி 1616-y

## வாலை சக்கரம்

ஏடுகள் : 1½ கி. எண்ணிக்கை : 100 அளவு : 19 × 3½ செ மீ
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாந்திரீகம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம :

மகரமென்ற மூன்றா மிராசியோர் தன்னில்
மதியென்ற பூரணந்தான் வளரு மப்பா
தகரமென்ற அண்டமதில் தேர்ந்து பாரு
தாரணியிற் பூமியதிற் பொங்கு மப்பா

முடிவு :

உள்ளனவே யவயவத்தைப் போற்றிக் கொண்டு
பூவென்று (மா)வென்று உகந்து கொண்டேன்

தெள்ளெனவே சீர்பாதம் அடிப ணிந்தேன்
சிவசிவா வென்றல்லோ தெளிவு தானே ! — 7

வாலச்சக்கரம் முற்றும்
குருநாதன் துணை

காலம் :

இல்லை

குறிப்பு :

தலைப்பு முதலில் இல்லை 7-ஆம் பாடலில் பின் 'வாலைசக்கரம் முற்றும்' என்றுளதால் தலைப்பு தரப்பட்டது சோதிடமும் கலந்து கூறப்பட்டுளது



வரிசை எண் : 3197 சுவடி எண்: 1616-z

# கொங்கணர் தீட்சை

ஏடுகள் : 1 1/2 கி எண்ணிக்கை : 100 அளவு : 19×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : தத்துவம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பராபரமே மெய்ப்பொருளாய்ப்
பரையி ருக்கும் முப்பொருளைத்
தராதரமாய் யெனையீன்ற சச்சுதர்
பாதம்

முடிவு :

மெச்சிரங் குய்யத்துள்ளே யிருக்கின்ற தீட்சைபெத்த
அட்சரம் ஊஆ வென்று அறிந்தவர் பெரியோர் தானே — 8
கொங்கணர் தீட்சை முற்றும்

குரு கமலம்

காலம்:

இல்லை

குறிப்பு:

இதில் தத்துவம் பேசப்படுகிறது.

வரிசை எண்: 3198 சுவடி எண்: 1616-z-1

## கொங்கணர் — 40

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 19×3½ செண்டி மீட்டர்

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : கொங்கணர் பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுள்ளது எழுத்து : தமிழ்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 862 -e/D-1801 போன்றது



வரிசை எண் : 3199 சுவடி எண் : 1616-z-2

## அகத்தியர் திருநடன சூத்திரம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 300 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

காலம் ;

இல்லை

குறிப்பு ;

இது, எமது சுவடி எண் 691-f/D-1357 போன்றது. ஆயினும் சுவடி எண் 756-f/D-1515 போன்றது.



வரிசை எண் : 3200 சுவடி எண் : 1616-z-3

## திருமந்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : திருமூலர் பொருள் : மருத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மூத்திர மாவது மூவ ரிருப்பிடம்
மூத்திர மாவது மூலத் தெழுந்தது
மூத்திர நின்று மூவ ரறிந்திலர்
மூத்திரந் தன்னை முறக்கச் சயிலமே! —1

முடிவு :

எடுத்த சயிலத்தி லிரதத்தைக் கூட்டி
கடுத்த சூரிசியின் கண்ணிலே ஊட்டி
மடித்ததி லிஞ்சியில் வயத்............... 13

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் தலைப்பு முன் பகுதி அரித்திருப்பதால் தெளிவில்லை.

— ... — —

வரிசை எண் : 3201 சுவடி எண் : 1616-z-4

## திருநந்திதேவர் ஞான தீட்சை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 25 அளவு : 19×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : நந்திதேவர் பொருள் : மந்திரம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருநந்தி தேவர் ஆதி வளளுவ நயினார் சாட்சியாகத்
திருமூல தேவருக்கு உபதேசம் பண்ணின
ஞான தீட்சை முறை.
உள்ளங்கைய்யிலே திருநீற்றை எடுத்து வைத்துத் திருமஞ்சனம்
விட்டு உள்ளங் கையில் குழைத்து குருபாத சக்கரத்தை எழுதி

முடிவு :

குருவை நினைத்து, நினைத்தப்படி எங்குந் தரிக்க
காயம் பரகெதி முத்திக்கு வழியாம்
இனிக்குருபாதச் சக்கரம் (சக்கரம் உளது)

காலம் ;

இல்லை

குறிப்பு ;

இதில், விபூதி குழைத்துத் தரிக்கும் முறை சொல்லப்பட்டுளது.



வரிசை எண் : 3202 சுவடி எண் : 1616–z–5

# குரு தீட்சை மந்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 19 × 3½ செ.மீ

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திரம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

அசிய ஸ்ரீ குருமந்திர சியா
விற்மரிஷி சிகாய.............வித்திரி
சசந்தா ஆ ஸ்ரீ அம்ச...........பி
தேவதா அம்பீசம்

முடிவு :

மூவண்ட முக்குருவாய் முடிக்குஞ்
சட்டைமுனியாகுங் கயிலாச
மூர்த்தி காப்பாம்.

காலம் ;

இல்லை

குறிப்பு :

இது, வடமொழி மந்திரங்களைத் தமிழ் எழுத்துக்களில் கூறுகிறது.



வரிசை எண் : 3203 சுவடி எண் : 1616-z-6

# பஞ்சாட்சரம்

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 400 அளவு : 19×3½ செ. மீ.

பக்கத்திற்கு : 9-10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம்.
பஞ்சாஷ்சா பரப்பிரம்ம
பாவனாசனம் பவுத்திரம் பரம
ஞான சிந்தை. மகா கிராந்த
சிவலோகஞ் சிவனென்பது

முடிவு :

நெய்வேத்தியம் தினம் அலங்காரமாகப்
படைச்சு வணங்கவும் சக்கரம்
அறிஓம் நமோ நாராயணா யென்று
வாலா மந்திரம் மூலம் ஒட்டி செபிக்கவும்
மத்திரம் சித்திம் பிற வசியம்.
(சக்கரம் ஒன்று உளது)

காலம் :

இல்லை

குறிப்பு :

இது. "நமசிவய" என்றும் ஐந்தெழுத்து மந்திரத்தின் அருமை பெருமைகளை எடுத்துக் கூறுகிறது.



வரிசை எண் : 3204 சுவடி எண் : 1616-z-7

# பார்வதிதாசர் ஆனந்தக் களிப்பு

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : பார்வதிதாசர் பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

தந்தங் கோவிந்த முகுந்த தந்தனாஎ ஈ
கோவிந்தனு வைகுந்த மானந்த வைகுந்த மானந்தம்

முடிவு :

ஓம் ஸிறி அரி நாராயணா வென்ற
நாமம் மறவோமே. தந்தங் கோவிந்த முகுந்தம்
தந்தனானா் கோவிந்த வைகுந்த மாந(ந்)தம்
வைகுந்த மானந்தம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இது, திருமாலைக் குறித்த பஜனைப் பாடலாகும்.



வரிசை எண் : 3205 சுவடி எண் : 1616z--8

# கும்மி

ஏடுகள் : 1 கி.எண்ணிக்கை : 50 அளவு : 19×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

தந்தனைத் தானை தனதானா
தனதான தந்தனத் தானனா
மூத்தை முட்டி முளைத்தழும்பி
அந்த முன் மண்டல மெல்லாம்ந்
தானங்கடந்து மேலத்தெரு விலை

முடிவு :

நம்மாலே நாமங் கெட்டுப் போன தெல்லாம்
குருநாதனைசி யென்று போகவிட்டு
சும்மா புறந்து சுறந்து மன்றே சொல்லிக்
கும்மி யடியுங்கோடி — 7

காலம் :

இல்லை

குறிப்பு :

இதன் பின்னர் பட்டினத்தார் பாடல் எழுதிய ஏடுகள் 2 உள்ளன.

